

# மரணம் முற்றுப்புள்ளி அல்ல

அப்துல் ரகுமான்

# மரணம் முற்றுப்புள்ளி அல்ல

**அப்துல் ரகுமான்**


நேஷனல் பப்ளிஷர்ஸ்

2, வடக்கு உஸ்மான் சாலை,
(கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில்),
தியாகராய நகர், சென்னை - 600 017.
✆ : 2834 3385

மரணம் முற்றுப்புள்ளி அல்ல

அப்துல் ரகுமான்



முதற் பதிப்பு - மே, 1986

ஐந்தாம் பதிப்பு - பிப்ரவரி, 2018

வெளியீடு

நேஷனல் பப்ளிஷர்ஸ்
2, வடக்கு உஸ்மான் சாலை,
முதல் மாடி, தியாகராயர் நகர், சென்னை-600 017.
தொலைபேசி : 044 - 28343385

அச்சிட்டோர்

சுப்ரா பிரிண்டெக்
சென்னை-600 005.

பக்கங்கள் : 88 (கிரவுன்)

விலை : ரூ. 45.00

**ISBN : 978-81-936445-8-4**

**Maranam Muttru Pulli Alla**
Author : **Abdul Rahman**



First Edition - May, 1986
**Fifth Edition - February, 2018**

*Publisher :*
**National Publishers**
2,North Usman Road,
(Near Kodambakkam Overbridge)
T. Nagar, Chennai - 600 017.
✆ : 044 - 28343385

*Printed by :*
**Supra Printek**
Chennai - 600 005.

**No. of Pages :** 88 (Crown)

**Price : Rs. 45.00**

# மரணம்
# முற்றுப்புள்ளி
# அல்ல





# ஒரு விளக்கம்

இந்தக் கட்டுரைகளை ஏன் எழுதினேன் என்பதை விளக்கியாக வேண்டும்.

ஏனென்றால்-

''உங்கள் கவிதைகளுக்கு நீங்களே உரை சொல்ல வேண்டியிருக்கிறது'' என்று சிலர் கொச்சைப்படுத்திப் பேசினார்கள்.

''இது உரை அல்ல'' என்பது மட்டுமே நான் அவர்களுக்குச் சொல்லும் பதில்.

''வாசகன் தானே கண்டறியும் மகிழ்ச்சியை ஏன் கெடுக்கிறீர்கள்?'' என்று உரிமையோடு கோபப்பட்டனர் சிலர்.

''இங்கே நான் எல்லாவற்றையும் பிட்டுப் பிட்டு வைக்கவில்லை; கோடி காட்டியிருக்கிறேன்'' என்பதே நான் இவர்களுக்குச் சொல்லும் பதில்.

''எங்களுக்குத் தெரியாதா, என்ன? நீங்கள் என்ன சொல்வது?'' என்று வருத்தப்பட்டனர் சிலர்.

''இது உங்களுக்காக எழுதப்பட்டதல்ல'' என்பதே நான் இவர்களுக்குச் சொல்லும் பதில்.

'பால்வீதி' வெளி வந்தபோது ''அதிலுள்ள பல கவிதைகள் புரியவில்லை;'' அல்லது ''புரிந்து கொள்வது சுலபமாக இல்லை'' என்று பலர் என்னிடம் குறைப் பட்டார்கள்.

'பால்வீதி'க் கவிதைகளின் மிகை 'இருண்மை' (obscurity) இதற்குக் காரணம் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன்.

'இருண்மை' கவிதைப் பண்புகளுள் ஒன்று. ஆனால் அதற்காக அதை நான் வலிந்து புகுத்த முயன்றதில்லை.

என் கவிகைளின் 'இருண்மை'க்கு இரண்டு காரணங்கள்.

> **கவிதையின் இறுக்கத்திற்காக ஊழைச் சதை என்று நான் நினைப்பதை எல்லாம் வெட்டி எறிந்துவிடுவது.**
>
> **'பால்வீதி' கவிதைகள் பெரும்பாலும் பரிசோதனைக் கவிதைகளாக இருப்பது.**

பரிசோதனைக் கவிதைகளில் பெரும்பாலானவை சர்ரியலிஸ'ப் பரிசோதனைகள். சர்ரியலிஸத்தின் பல் வேறு சாத்தியக் கூறுகளை நான் பரிசோதித்துப் பார்த்தேன். 'இருண்மை' மிகுந்ததற்கு இதுவே முதன்மையான காரணம். இது தமிழுக்குப் புதியது என்பதனால் அந்த 'இருண்மை' இன்னும் அதிகமாக உணரப்பட்டது.

புரிந்து கொள்ள முடியாமல், ஆனால் புரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தோடு என்னை அணுகியவர் களுக்கு நான் சில விளக்கங்கள் கூறி, கோடி காட்டியபோது

அவர்கள் வியப்படைந்தது என்னைச் சிந்திக்க வைத்தது. ''இதையெல்லாம் நீங்கள் ஏன் எழுதக் கூடாது; பலருக்குப் பயன்படுமே'' என்றும் என்னைக் கேட்டார்கள்.

அப்போதும் கூட நான் தயங்கியே வந்தேன்.

புரிந்து கொள்ளாமலும், புரிந்து கொள்ள முடியாமலும் என் கவிதைகள் தவறாக விமர்சிக்கப்பட்டபோது அந்த விமர்சகர்களின் அறியாமை எனக்கு வியப்பும் நகைப்பும் ஊட்டியது. என் சர்ரியலிஸப் படிமங்களை அவர்கள் வெறும் உவமை, உருவகங்களாக நினைத்து மயங்கி இருந்தனர். என்னை வெளிப்படுத்த வேண்டிய தருணம் வந்துவிட்டது என்று நினைத்தேன். எழுதத் தொடங்கினேன்.

'ஜூனியர் விகட'னில் என் கட்டுரைத் தொடரில் இடையிடையே இந்தக் கட்டுரைகளை எழுதி வந்தேன்.

வாசகர்களிடம் இந்தக் கட்டுரைகளுக்குக் கிடைத்த வரவேற்பு என்னைத் திகைக்க வைத்தது.

'இந்தக் கட்டுரைகள் எங்களுக்குப் பாடப்புத்தகமாக இருக்கின்றன'' என்று இளங் கவிஞர்கள் கூறினார்கள்.

'பால்வீதி'யை மீண்டும் படிக்கத் தொடங்கியிருக்கிறோம். இப்போதுதான் அதன் பரிமாணங்களை முழுவதுமாக அறிந்து அனுபவிக்க முடிகிறது,'' என்று பலர் கூறினார்கள்.

என் மகள், ''பால்வீதி' போல் எழுதாதே. அது எனக்குப் பிடிக்கவில்லை. இதுபோல் எழுது இது எனக்குப் பிடிக்கிறது' என்றாள்.

என் கவிதைகள் ஏற்படுத்தாத விளைவுகளை, அவற்றைப் பற்றிய கட்டுரைகள் ஏற்படுத்தியதையும் என்னால் இங்கே குறிப்பிடாமல் இருக்க முடியாது.

அண்ணனைவிபத்தில் இழந்து தாள முடியாத சோகத்தில் இருந்த ஒருவர் 'மரணம் முற்றுப்புள்ளி அல்ல' என்ற கட்டுரையைப் படித்து விட்டு ஆறுதல் அடைந்ததாகத் தெரிவித்தார்.

இறந்து பிறந்த குழந்தையின் சோகத்தில் அடிக்கடி அழுது கொண்டிருந்த மனைவியைக் கண்டித்துக் கொண்டிருந்த கணவர் 'மலட்டுத் தாய்' என்ற கட்டுரையைப் படித்த பிறகு கண்டிப்பதை நிறுத்திவிட்டதோடு மனைவியைப் பரிவோடு நடத்தி வருவதை ஒரு வாசகர் தெரிவித்திருந்தார்.

மாதிரிக்கு இந்த இரண்டைச் சொன்னேன்.

3-5-86 **அப்துல் ரகுமான்**
வாணியம்பாடி

## இரண்டாம் பதிப்பின் முன்னுரை

'**பா**ல்வீதி' பற்றிய கட்டுரைகளை மட்டும் தொகுத்து 'அன்னம்' பதிப்பகம் 1986இல் நூலாக வெளியிட்டது. இப்போது 'நேஷனல் பப்ளிஷர்ஸ்' இதை இரண்டாம் பதிப்பாக வெளியிடுகிறது. இந்தப் பதிப்பில் 'ஆதியிலே வார்த்தை இருந்தது' என்ற கட்டுரை புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. நெடுங்காலமாகக் கிடைக்காதிருந்த இந்நூலை இரண்டாம் பதிப்பாக வெளியிடும் 'நேஷனல் பப்ளிஷர்'ஸுக்கு என் நன்றி.

25-12-04 **அப்துல் ரகுமான்**
சென்னை

# படைப்பாக்க ரகசியங்கள்

**த**மிழ்ப் புதுக்கவிதைக்கு புதுநெறி காட்டிய கவிஞர் அப்துல் ரகுமான்.

அவர் தம் கவிதை அனுபவங்களை -சில கவிதைகள் உருவான சூழல்களை இங்கே விவரிக்கிறார்.

இது கவிஞர் அப்துல்ரகுமானின் 'விசிட்டிங் கார்ட்'. பாதரச முலாம் பூசப்பட்டிருப்பதால் நம்முடைய முகங்களும் தெரிகின்றன.

'ஜூனியர் விகட'னில் கவிஞர் இது வரை நூறு கட்டுரைகள் எழுதியிருக்கிறார். அவற்றுள் நூலுருவம் பெற்றுள்ள இந்தப் பத்துக் கட்டுரைகளும் தனிச் சிறப்புக் குரியவை. ஒரு கவிஞரின் கவிதைப் படைப்பாக்க ரகசியங் களை வெளிப்படுத்துவதால் தமிழுக்குப் புதுமையானவை.

இவை கவிதையை விளக்க எழுதப்பட்ட கட்டுரைகள் மட்டுமல்ல; கவிதைகள்; வசன கவிதைகள்.

**'டிக் டிக்... டிக் டிக்**
**நாளின் ரத்தம் கணத்துளிகளாய்ச்**
**சொட்டும் ஒலியா?**
**என் ஆயுள் குடம் ஒழுகும் ஓசையா?**
**காலதேவனின் நாம ஜெபமா?**
**காலனின் காலடி ஓசையா?**

ஒவ்வொரு வரியிலும் உன்னதக் கவிதை!

தூக்கத்தைக் கொன்றுவிட்டுத் தூக்கமாததிரைகளைத் தயாரித்துத் தரும் அறிவியலை என்ன சொல்வது? எப்படிச் சாடுவது? அறிவியலுக்குப் பார்வை மழுங்கிவிட்டது கண்ணாடி மாட்டியாக வேண்டும் என்கிறார் கவிஞர்.

ஓ... கவிஞரின் ஆறாவது விரல்வழியே ரத்தமா வடிகிறது... பென்சிலின் அல்லவா ஊற்றெடுக்கிறது...

**– *மீரா***




# முகவரிச் சீட்டு

'**பா**ல்வீதி' என்ற என் கவிதைத் தொகுதியை
உருவாக்கி முடித்திருந்தேன்.
வாசகர்களுக்கு என் கவிதைகளை
அறிமுகம் செய்து வைப்பதற்கு
ஒரு முகவரிச் சீட்டு எழுத விரும்பினேன்.

> என் ஆறாவது விரல் வழியே
> சிலுவையிலிருந்து
> வடிகிறது ரத்தம்
> ஆம் -
> என் 'மாம்சம்'
> வார்த்தை ஆகிறது

என்று எழுதினேன்.

என் வாழ்க்கை, என் உணர்வுகள், என் எண் ணங்கள்....
இவைகள்தாம் நான்
இவற்றை இந்த உலகத்திலிருந்துதான்
நான் பெற்றேன். பெற்றதை நான் திருப்பித் தந்துவிட
விரும்புகிறேன். ஏனென்றால் நான்
கடனாளியாக இருக்க விரும்பவில்லை.

என்னைச் சில்லறையாக மாற்றி,
என் கவிதைகளில் கொஞ்சம் கொஞ்சமாகத்
தந்து கொண்டிருக்கிறேன்.

பேனா எனக்குப் பிறிதின் கிழமை அல்ல;
தற்கிழமை;
என் விரல்களில் ஒன்று;
ஆறாவது விரல்.

இந்த விரலும் எனக்கு
மற்ற விரல்களைப் போலத் தான்.

எடுப்பதும் கொடுப்பதும்
அடிப்பதும் அணைப்பதும்
அழைப்பதும் மறுப்பதும்
சுட்டுவதும் அதட்டுவதும்

இந்த விரலும் செய்கிறது.

இந்த விரலோடு சேர்ந்திருக்கிற பொழுதுதான்
மற்ற விரல்கள் எனக்கு விரல்களாகத் தெரிகின்றன.

கை ரேகைகளில்
நம் சரித்திரம் இருப்பதாகச் சொல்லுகிறார்கள்.
அது உண்மையோ, பொய்யோ?

என் ஆறாவது விரல் வரையும் ரேகைகளில்
நான் இருக்கிறேன்.

என் பேனாவிலிருந்து வரும் மை
வெறும் மை அல்ல;
என் ரத்தம்; என் ரசம்.
இந்த மையில்
என்னைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைத்துத்
தெளித்துக் கொண்டிருக்கிறேன்.

ரத்தம் ஏன் வழிகிறது?

வாழ்க்கை ஒரு சிலுவை;
அதில் நான் அறையப் பட்டிருக்கிறேன்.
(ஒவ்வொருவரும் தான்.)
ஒவ்வோர் அனுபவமும் ஓர் ஆணிதான்.

ஆணிகள் திறந்த காயங்களின்
(உடலே காயம் தானே)
ரத்தம்தான்
என் ஆறாவது விரல் வழியாக வழிகிறது.

என் 'மாம்சம்' - என் உடல்
கரைந்து கரைந்து வார்த்தையாகிக் கொண்டிருக்கிறது.

இயேசு மானுட உடல் எடுத்து வந்தது பற்றி
பைபிளில் யோவான் இவ்வாறு கூறுகிறார்.

ஆதியிலே
வார்த்தை இருந்தது

அந்த வார்த்தை
தேவனிடத்திலிருந்தது

அந்த வார்த்தை
தேவனாயிருந்தது

அவர் ஆதியிலே
தேவனோடிருந்தார்

சகலமும்
அவர் மூலமாய்
உண்டாயிற்று
உண்டானதொன்றும்
அவராலேயல்லாமல்
உண்டாகவில்லை

அவருக்குள்
ஜீவன் இருந்தது
அந்த ஜீவன்
மனுஷருக்கு
ஒளியாயிருந்தது

அந்த ஒளி
இருளிலே பிரகாசிக்கிறது
இருளானது
அதைப் பற்றிக்கொள்ளவில்லை

......

உலகத்திலே வந்து
எந்த மனுஷனையும்
பிரகாசிப்பிக்கிற ஒளியே
அந்த மெய்யான ஒளி

....
அந்த வார்த்தை
மாம்சமாகி
கிருபையினாலும்
சத்தியத்தினாலும்
நிறைந்தவராய்
நமக்குள்ளே
வாசம் பண்ணினார்

இயேசுவில்
வார்த்தை மாம்சமாயிற்று;
என்னில்
மாம்சம் வார்த்தையாகிக் கொண்டிருக்கிறது.

இந்த வார்த்தை அதே வார்த்தைதான்.
ஆதியிலே இருந்த வார்த்தை.

வார்த்தை ஓசையின் அம்சம்.
ஓசை படைப்பின் சப்தம்.

சகலமும் அதன் மூலம் உண்டாகும்.
அதனுள் ஜீவன் இருக்கும்.
அந்த ஜீவன் மனுஷருக்கு
ஒளியாக இருக்கும்.
அந்த ஒளி
இருளில் பிரகாசிக்கும்.
இருள் அதைப் பற்றிக்கொள்ளாது.

*இயேசு சிலுவையில் அறையப்பட்ட பொழுது*
*''ஏலீ! ஏலீ! லாமா சபக்தானி'' என் தேவனே!*
*என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்''*
*என்று சத்தமிட்டுக் கூப்பிட்டார்.*

எனக்கோ என் மாம்சம் வார்த்தையாவது
-ஒரு சுதந்திரம்; சுகானுபவம்; வீடு திரும்பல்!
எனவே 'என் தேவனே! எனக்குக் கைகொடுத்தீர்!'
என்று என் கவிதைக்குத் தலைப்புக் கொடுத்தேன்.

கவிஞர் ஒருவர் என்னைக் கேட்டார்:

''இவ்வளவு அர்த்தமுள்ள கவிதையை
ஏன் இவ்வளவு சின்னதாகச் செய்தீர்கள்?''
நான் சொன்னேன்:

''இது விசிட்டிங் கார்ட்;
விசிட்டிங் கார்ட் சின்னதாகத் தான் இருக்கும்.''

■

*22.8.84*




# இமைகளைக் காப்போம்

**க**லைடாஸ் கோப்பைப் பார்த்திருப்பீர்கள்.
ஒவ்வொரு முறை அதைத் திருப்பும் போதும்
உள்ளே கிடக்கும் வர்ணக் கண்ணாடித் துண்டுகள்
ஒவ்வொரு வகையாக இணைந்து
எவ்வளவு அழகாகப்
புதுப்புதுக் கோலங்களை
அமைத்துக் காட்டுகின்றன!
நாம் முயன்றால் கூட
இத்தகைய அற்புதமான கோலங்களை
வரைய முடியாது.

குறியீடுகளோடும் இப்படி விளையாடலாம்.
சர்ரியலிஸ விளையாட்டு.
விளையாட்டா அது? வினையாட்டு!

நாம் அறியாத ஆழங்களுக்கு,
நாம் காணாத புதிய உலகங்களுக்கு
அழைத்துச் செல்லும் பரவச அனுபவம்.

எப்படி விளையாடுவது என்கிறீர்களா?
ஏதாவதொரு குறியீட்டை
எடுத்துக் கொள்ளுங்கள்.
இதுதான் பிரதான விளையாட்டுக்காரன்.
பிறகு, இதனோடு தொடர்புடைய
அல்லது முரணான குறியீடுகளை
எடுத்துக் கொள்ளுங்கள்.
இப்போது விளையாட ஆரம்பிக்கலாம்.

பிரதானக் குறியீட்டோடு
துணைக் குறியீடுகளை
ஒவ்வொன்றாக இணைத்துப் பாருங்கள்.
ஒவ்வோர் இணைப்பிலும்
ஓர் அற்புதமான கோலம் வரும்.
அந்தக் கோலத்திலிருந்து
அழகான அர்த்த அலைகள் வரும்.
பிரமித்துப் போவீர்கள்.

இப்படி ஒருமுறை
நான் ஆடிய ஆட்டத்தின் விளைவுதான்
'நெற்றிக் கண்' என்ற என் கவிதை.

நான் எடுத்துக் கொண்ட பிரதானக் குறியீடு
'நெற்றிக் கண்'.
கோபம், அறிவு என்று
இதற்குப் பல பொருள் கொள்ளலாம்.

இனி, துணைக் குறியீடுகள்.
நெற்றிக் கண் என்றதும்
அதனோடு தொடர்புடைய நக்கீரனும் மன்மதனும்
நினைவுக்கு வந்தார்கள்.
நக்கீரன் யாராயிருந்தாலும் அஞ்சாமல்
உண்மையை எடுத்துச் சொல்பவனுக்குக் குறியீடு.
மன்மதன் உங்களுக்குத் தெரியும்.
நெற்றிக் கண்ணோடு தொடர்புடைய திலகமும்
என் நினைவுக்கு வந்தது.
இந்த நான்கு வர்ணக் கண்ணாடித் துண்டுகளையும்
என் கலைடாஸ்கோப்பில்
ஒன்றாகப் போட்டுச் சுழற்றினேன்.
நெற்றிக் கண் திலகமாக நடித்தது.
மன்மதன் நக்கீரனாக வேடம் தரித்துக் கொண்டான்.

நெற்றிக் கண்ணுக்கு
மன்மதனை எரிக்க வேண்டும் என்று வெறி.
ஆனால் நெற்றிக் கண் என்று தெரிந்தால்
முன்னால் வரமாட்டான்.
எனவே அவனை ஒளிந்திருந்து தாக்குவதற்குத்
திலகமாக நடிக்கிறது.
மன்மதனும் சாதாரணமானவனா?
நெற்றிக்கண்ணை ஏமாற்ற
நக்கீர வேடம் தரித்துக் கொள்கிறான்.
நக்கீரன் என்றால் நெற்றிக் கண்
கொஞ்சம் பயப்படுமல்லவா?
மன்மதனுக்குத் திலக வேடம் புரிகிறது.
தனக்குள் குறும்பாகச் சொல்லிக் கொள்கிறான்:

திலகமாக நடிக்கும்
நெற்றிக் கண்ணே!
நானும்
நக்கீர வேடமிட்ட
மன்மதன்தான்

ஏமாற்றுவதற்கு வேடம்;
ஏமாற்றுகிறவனை ஏமாற்றுவதற்கு வேடம்.
காதலும் சில நேரங்களில் தன்னை வெளிக்காட்டாமல்
வேடத்தில் ஒளிந்து கொள்கிறதல்லவா!
உலகம் ஒரு நாடக மேடை என்பது
எவ்வளவு உண்மை.

அடுத்து-நெற்றிக் கண்ணோடு தொடர்புடைய
சாம்பல்-மன்மதனை எரித்த சாம்பல்.
'கண்டதும் காதல்' என்கிறோம்.
ஆனால் மன்மதன் கதையில் நடந்தது என்ன?

நெற்றிக்கண்
கண்டதும் காதல் எரிந்தது

பிறகு?
சாம்பல் பறந்து நெற்றிக் கண்ணில் விழுந்தது.
விளைவு?

சாம்பல் விழுந்து
நெற்றிக்கண் எரிந்தது

அடடா! சாம்பலான பிறகும்
மன்மதன் பழி வாங்குகிறான்.
எரிக்கிற கண்ணே எரிகிறது!

சாம்பலின் கௌரவப் பெயர்- திருநீறு.
அதை இணைத்துப் பார்த்தேன்.

> **நெற்றிக் கண்ணே!**
> **உன்னை மறைக்கும்**
> **திருநீற்றுக்கோ**
> **மன்மத தகனம்**

காதலர்களை அழித்த பிறகுதான்
சிலருக்குக் கோபம் தணியும்.
அதையே சாதனையாக - பெருமையாகச்
சொல்லிக் கொள்வார்கள்.
திருநீற்றைப் பார்த்து நாம் ஏமாறிவிடக் கூடாது.
அது 'மன்மத தகனத்தின்
சாம்பலாகவும் இருக்கலாம்.
உள்ளே இருக்கும் நெருப்பை மறைப்பதற்குத்
'திருநீறு'! அதுவும் மன்மதனின் சாம்பல்!

சிலரோ காதலர்களை அழித்த பிறகு
வருந்துவார்கள்: அவர்கள் அழிவுச் சின்னங்களையே
நினைவுச் சின்னங்களாக்கிப்
பெருமைப்படுத்துவார்கள்.

அடுதுக் கோலம்.
பரமசிவன்
தம் இடப்பக்கத்தில் அமர்ந்திருக்கும் பார்வதியைப்
பார்க்கிறார். அவள் கண்களில்
அவர் இதுவரை காணாத பயங்கரக் கவர்ச்சி;
மயங்குகிறார். வியப்போடு கேட்கிறார்;

"இடமே
உன் கண்ணில் ஏது
என்றுமில்லாத ஆகர்ஷணம்?"

*பார்வதி பதில் சொல்கிறாள்:*

"வலமே!
உன் முன் கிடந்த
சாம்பலைக் குழைத்து
மை தீட்டினேன்

*எரிந்தாலும் மன்மதன் மன்மதன்தான்.*
*மன்மதனை எரிக்கலாம்;*
*'மன்மத'த்தை எரிக்க முடியுமா?*
*அவன் சாம்பலுக்கும் சக்தி உண்டு.*
*எரிந்து விழுந்த பிறகும்*
*எரித்தவனையே வெல்ல அவனால் முடியும்.*
*மற்றவர்களிடத்தில்*
*காதலைக் கண்டால் கொதிக்கிறவர்கள்*
*சில நேரத்தில் தாங்களே அதனிடம்*
*அடிபட்டு விழுந்து விடுகிறார்கள் அல்லவா?*

*கண் என்றால் 'கண்ணடித்தல்' இருக்குமே!*
*அடுத்த கோலம் இது:*

"மயக்கத்தில்
நெற்றிக் கண்ணடித்தேன்
ரதியைப் பார்த்து

*இதில்தான் என்னென்ன அர்த்தங்கள்!*

*கண்ணுக்கு ஆபரணம் கண்ணீர் அல்லவா?*
*ஆனால் நெற்றிக் கண்ணில் கண்ணீர் சுரக்குமா?*

நெருப்பில் நீர் பிறக்குமா?
வறண்ட அறிவுக்கு
அன்பு, இரக்கம் இவையெல்லாம் உண்டா?

**பகலுறக்கக் கனவில்**
**நெற்றிக் கண் கண்டது**
**கண்ணீரை**

கண்ணீரைக் கனவில்தான் காண முடியும்.
அதுவும் பகற் கனவு; பலிக்காத கனவு!

கண் பார்வை மங்கினால்
கண்ணாடி மாட்ட வேண்டுமே!
மாட்டிப் பார்த்தேன். நெற்றிக் கண்ணுக்குக் கண்ணாடி!
நினைத்தாலே புல்லரிக்கிறது.
நெற்றிக் கண் நெருப்புக் கண்.
நெருப்புக்கு வெப்பம், வெளிச்சம்
இரண்டும் உண்டல்லவா?
வெப்பம் மட்டும் இருந்து
வெளிச்சம் மழுங்கிவிட்டால்?

நெற்றிக்கண் அறிவைக் குறிக்கும் என்று
பார்த்தோமல்லவா?
அதை அறிவியல் என்று
விரித்துக் கொள்ளுங்கள்.
பயங்கரமான அழிவுக் கருவிகளை
உண்டாக்கிக் கொண்டிருக்கும்
குருட்டு அறிவியலை நினைத்துக் கொள்ளுங்கள்.
வெப்பம் இருக்கிறது; வெளிச்சம் இல்லை.
எவ்வளவு கொடுமை!

அறிவியலுக்குப் பார்வை மழுங்கிவிட்டது.
கண்ணாடி மாட்டியாக வேண்டும்.

> வெப்ப விழியிருக்க
> வெளிச்சப் பார்வை
> மழுங்கிவிட்டது உனக்கு
> நெற்றிக் கண்ணே!
> இந்தா இந்தக்
> கண்ணாடியை அணிந்துகொள்

என்று எழுதிவிட்டேன்.
ஆனால் என்ன கண்ணாடி என்று சொன்னால்
நன்றாக இருக்கும் என்று தோன்றியது.
என்ன கண்ணாடியை மாட்டினால்
சரியாக இருக்கும்?
புரியவில்லை.
வழக்கப்படி
இந்த மாதிரி நேரங்களில்
உதவும் 'சர்ரியலிஸ'த்திடம் சரண்புகுந்தேன்.
சிறிது நேரத்திற்குப் பிறகு
'பூ' என்ற படிமத்தை
மனம் எடுத்துக் கொடுத்தது.

'பூக்கண்ணாடி'-
இந்த விசித்திர இணைப்பே சிலிர்க்க வைத்தது.
அதென்ன பூ?
சிந்தித்துப் பார்த்தேன்.
பூ என்றால் மென்மை.
மென்மை=அன்பு, மனிதாபிமானம்.
பூத் தோன்றியதற்கு

இன்னொரு காரணமும் புலப்பட்டது. நெற்றிக் கண்-
மன்மதன் என்றே சிந்தித்து வந்தேனல்லவா?
அந்தத் தொடர்பு மனத்தில்
பூவைத் தேர்ந்தெடுத்துத் தோன்றச் செய்திருக்கிறது.
பூ மன்மதனின் கணையல்லவா?

அறிவியலுக்கு இன்றைய தேவை
அன்பு, மானுட நேயம்.
இவை இல்லாத வெற்று அறிவு
உலகத்தை எரித்துக் கரியாக்கிவிடும்.

அடுத்து, கண்ணோடு
நெருங்கிய தொடர்புடைய இமை.
நெற்றிக் கண்ணோடு பொருத்திப் பார்த்தேன்.

ஒருநாள்
நெற்றிக்கண் அலறியது
கோப வெறியில்
என் இமைகளையே
எரித்துக்கொண்டேன்
யாரேனும்
இமைகளைக் கொடுங்கள்
என்னால்
உறங்க முடியவில்லை

அறிவியல் வசதிகளையும் தந்திருக்கிறது.
உண்மை தான்.
ஆனால்
அவற்றைப் பெறுவதற்கான போராட்டம்,
அதற்காகப் பொருள் தேடும் பிரச்சினை,
அதனால் விளையும் சுயநல வெறி,

விறைப்பு மிகுந்த வாழ்க்கை,
அல்சர், ரத்தக் கொதிப்பு, நிம்மதியின்மை, மனநோய்,
அச்சம் தரும் அழிவுக் கருவிகளின் பெருக்கம்
-இவையும் அறிவியல் நாகரிகத்தின் 'பரிசுகள்' தாமே.

பெற்றோர்களைக் கொன்றுவிட்டுப்
பிள்ளைகளுக்கு அனாதை ஆஸ்ரமம்
கட்டிக் கொடுப்பது போல, தூக்கத்தைக் கொன்றுவிட்டுத்
தூக்க மாத்திரைகளைத் தயாரித்துத் தருகிறது
அறிவியல்

அன்பையும் பண்பையும் ஒதுக்கிவிட்டுக்
கட்டுப் பாடில்லாமல் அறிவியல் வளருமானால்,
'என்னால் உறங்க முடியவில்லையே' என்று
ஒரு நாள் அலறத்தான் போகிறது.
அதனால் உலகமும் அலறத்தான் போகிறது.
அந்தப் பயங்கர நிலைமை
வராமல் இருக்க வேண்டும் என்றால்
நாம் 'இமை'களைக் காப்பாற்றியாக வேண்டும்.

■

*13.3.85*




# காலத்தின் அருக்கனையில்

சிந்தித்துப் பார்த்தால் வியப்பாகத்தான் இருக்கிறது.
எப்படி நேர்கிறது இது?

ஒருவரை ஒருவர் அறியாத இருவர்
ஒருவருக்குள் ஒருவராக எப்படி ஆகிறார்கள்?
ஒரே ஒரு சடங்கு பன்மையை
எப்படி ஒருமை ஆக்கிவிடுகிறது?
திருமணத்தைப் பற்றித்தான் சொல்கிறேன்.

உறவுகளுக்கு ரத்தம்தான் ஆதாரம்.
ஆனால் ரத்த சம்பந்தம் இல்லாமல்
இந்த உறவு எப்படி மலர்கிறது?
அதுவும் ரத்த உறவுகளை விட ஆழமாக, அழகாக.

அந்தச் சடங்கில் ஆணும் பெண்ணும்
புதிதாகச் சேர்ந்து பிறக்கிறார்கள்.
அதற்கு முன்னிருந்த அவர்கள் தனி முகவரிகள்
கலைந்து போய்விடுகின்றன.

என் மனைவியும் நானும்
-நாரில் தொடுக்கப்பட்ட மலர்களல்ல;
நாரில் பூத்த மலர்கள்!

பெண் ஆணின் விலா எலும்பிலிருந்து
படைக்கப்பட்டவள் என்கிறார்கள்.
எனக்கு மனைவியாக வாய்த்தவள்
என் விலா எலும்புதானா?
எவ்வளவு பயங்கரமான கேள்வி!

ஒவ்வொருவனுக்கும் இரண்டு தாரங்கள்.
ஒருத்தி திருமணத்திற்கு முன்
கனவுகளால் வரையப்பட்டவள்;
மற்றொருத்தி மனைவியாக வாய்ப்பவள்.

எனக்கும் ஒரு கனவு ஓவியம் இருந்தது.
கொஞ்சம் பூக்கள்,
கொஞ்சம் நிலா வெளிச்சம்,
கொஞ்சம் வானவில் வர்ணங்கள்,
நிறைய சங்கீதம்
- எல்லாம் குழைத்து வரைந்த ஓவியம்.
ஓ! எவ்வளவு அழகான ஓவியம்!

கதகதப்பான கனவுகளைப் போர்த்திக் கொண்டு
உறங்கிய என் ஏக்கங்கள்

வெப்பம் பட்டு விழித்துப் பார்க்கின்றன.
எதிரில் யதார்த்தம்.
ஓ! இதுவும் அழகாகத்தான் இருக்கிறது.
வேறு வகையான அழகு;
கனவின் வேலிக்கு வெளியே பூத்த அழகு;
யதார்த்த அழகு!

உடலெல்லாம் பற்றி எரியும்
அந்தப் பசிப் பொழுதுகளை நினைத்துப் பார்க்கிறேன்.
பாதிகள் நாம் என்று
உக்கிரமாக உணரும் பசி; முழுமை அடையும் வெறியில்
ஆணவம், வெட்கம் எல்லாம் துறந்து,
செருக்குகளையே பிச்சைப் பாத்திரங்களாக ஏந்தி
ஒருவரை ஒருவர் யாசிக்கும் பசி;
ஒருவரை ஒருவர் உண்டு தணியும் பசி!

தூண்டில் முள் புழுவைப் போர்த்தியிருக்கிறது.
பசித்த மீனுக்குப் புழுதான் தெரிகிறது;
முள் தெரிவதில்லை.
சிக்கிக் கொள்கிறது.

இளமையின் மோக ஈர்ப்பு
நெளிந்து நெளிந்து அழைக்கும் அழகான புழு.
சிக்கிக் கொள்கிறோம். கரையில் தூண்டில் பிடித்து,
உட்கார்ந்திருப்பது
பரிணாமம்.

புழு இல்லையென்றால்
தூண்டிலில் மீன் சிக்குமா?

ஒன்றே போல் இருப்பதைப் பொருத்த முடியாது.
முரணாக இருப்பவற்றைத்தான்
பொருத்த முடியும்.
அழகும் சுவையும் அதில்தான் பிறக்கும்.
அதனால்தான் இயற்கை
ஆணையும் பெண்ணையும்
முரண்களாகப் படைத்திருக்கிறது.
ஆம், அவர்களின் சங்கமம்
ஒரு முரண்தொடை.

வெறும் ஒலிகளாக இருந்த நாம்
சொற்களாகிறோம். ஒருவரை ஒருவர் உச்சரித்து
அர்த்தங்களால் நிரம்புகிறோம்.

வாழ்க்கையின் நடையில்
ஒவ்வொரு பருவமும் கோப்பை ஏந்தி வருகிறது.
நாம் அதில் பானம் பருகுகிறோம்.

காலம் முதிர முதிரக் கோப்பைகள் மாறுகின்றன.
பானங்களும் மாறுகின்றன.

வாலிபப் பருவத்தில் நம் பானம்
நுரைத்துப் பொங்கும் மதுவாகச் சுவைக்கிறது.
இருவரும் போதையில் மிதக்கிறோம்.

நடுப் பருவத்தில் மது
மெதுவாகப் பாலாகி விடுகிறது.
ஒருவருக்கு ஒருவர் ஊட்டச் சத்தாகிறோம்.

முதுமைப் பருவத்தில் பானம்
மருந்தாகி விடுகிறது. ஒருவருக்கு ஒருவர் நிவாரணம் ஆகிறோம்.

பருவத்திற்கேற்ப
பானம் பரிணாமம் அடைகிறது.

சக்கரங்கள் இருக்கும் வரை
மனத்தேர் உருளத்தான் செய்கிறது.
உற்சவ நேரங்களில் அது
ஊர்வலம் புறப்பட்டு விடுகிறது. சபல வடங்கள் இழுத்துச் செல்கின்றன. இருந்தாலும் இறுதியில் தேர் நிலைக்கு வந்துதான் நிற்கிறது.

இரண்டு எண்களாக நிற்கிறோம் நாம்.
இடையில் வரும் கணிதக் குறிகளால்
கணவன்-மனைவி, அப்பா- அம்மா, பாட்டன்-பாட்டி,
மாமன்-மாமி என்று
வெவ்வேறு விடையாகிறோம்.
கூட்டப்படுகிறோம்;
கழிக்கப்படுகிறோம்;
பெருக்கப்படுகிறோம்;
வகுக்கப்படுகிறோம்.

சிந்தித்துப் பார்க்கிறேன்.
ஆணையும் பெண்ணையும் இணைப்பதில்
இயற்கையின் அழகான சூழ்ச்சி புரிகிறது.

கணவன்-மனைவி தீக்கடை கோல்கள்.
காலம் தன் அடுக்களையில்

இந்தக் கோல்களை ஆயத்தமாக வைத்திருக்கிறது.
தான் சமையல் செய்ய விரும்புகிற போதெல்லாம்
இந்தக் கோல்களைக் கடைந்து
நெருப்பை உண்டாக்கிக் கொள்கிறது.

இந்தச் சிந்தனைகளில்
தீக்கடை கோல்கள் என்ற
என் கவிதை பிறக்கிறது-ஒரு குழந்தையைப் போல.

நாரில் பூத்த மலர்கள்
நானும் நீயும்
நாவைத் தொங்கப்போட்டு
வாலாட்டிய என்
பருவத்தின் முன்
வந்து விழுந்தது
என் விலா எலும்போ?

கதகதப்பான கனவுகளைப்
போர்த்து உறங்கிய
என் ஏக்கங்கள்
உன் யதார்த்த கிரணங்களால்
கண் விழித்தன

பாதிகள் நாம் என
உணரும் பசிப் பொழுதில்
செருக்குகளையே ஏந்தி
ஒருவரது வாசலில்
ஒருவர் இரக்கின்றோம்

இருவர்களிடையே
இந்த மோக ஈர்ப்பு
பரிணாமத் தூண்டிலின் புழு

நம் சங்கமம்
முரண் தொடை

ஒருவரை ஒருவர்
உச்சரித்து
அர்த்தங்களால்
நாம் நிரம்புகிறோம்

மாறும் பருவக் கோப்பைகளில்
நம் பானமும்
மதுவாகிப்
பாலாகி
மருந்தாகப்
பரிணமிக்கும்

சபல வடங்களால் இழுபடும்
என் மன ரதத்தின் நிலை
உன்னிடம்தான்

உணர்வுகள் எழுதும் கணிதக் குறிகளால்
வெவ்வேறு விடையாகும்
எண்கள் நாம்

காலத்தின் அடுக்களையில்
தீக்கடை கோல்கள் நாம்

■

*29.5.85*




# இறந்த நான்

சுவரில் என் புகைப்படம் தொங்குகிறது.
பார்வை அதன் மேல் படிகிறது.
உற்றுப் பார்க்கிறேன்.
எண்ணங்கள் கிளர்கின்றன.

இது யார்? நான்தான்.
நான் தானா?
இல்லை, இது வேறு நான்;
பழைய நான்.
இறந்த காலத்தின் ஏதோ ஒரு கணத்து நான்.

ஆம், இறந்துவிட்ட நான்!

கணத்திற்குக் கணம்
நான் மாறிக்கொண்டிருக்கிறேன்;

புதிதாகிக் கொண்டிருக்கிறேன்;
உடலால், உள்ளத்தால்.

சென்ற கணத்தில் இருந்த நான்
இப்போது இல்லை;
இது புதிய நான்.

இதோ! இந்தப் புகைப்படம்
என் பிணந்தான்.
கண்ணாடிச் சமாதியில் புதைக்கப்பட்ட பிணம்:
என் பிணமே என்னை வெறித்துப் பார்க்கிறது.
விசித்திரமான அனுபவம்.

தினந்தோறும் நான் கிழிக்கப்படுகிறேன்;
ஒவ்வொரு தேதித் தாளாக.
எத்தனையோ தேதித் தாள்கள்
காலக் குப்பையில்.

இதோ! இது என்றோ
என்னிலிருந்து கிழிக்கப்பட்ட ஒரு தேதித் தாள்.
இங்கே சுவரில்
சிலுவை அறையப் பட்டிருக்கிறது.

இந்தக் கண்ணாடிச் சாளரத்தின் வழியாக
என் நிகழ்காலம் எட்டிப் பார்க்கிறது.
அதோ! என் நிழல்;
நான் விட்டு விட்டு வந்த நிழல்;
இறந்தகாலத்தில் சிறைப்பட்டு விட்ட என் நிழல்!

இங்கே நான் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறேன்,
வெளிச்சத்தால்.

ஆனால் இந்த மொழிபெயர்ப்பு
உண்மையான பெயர்ப்பு அல்ல;
வெறும் சொற்பெயர்ப்பு.

நானோ நாளுக்கு நாள்
அர்த்தப் பரிணாமம் அடைந்து கொண்டே இருக்கும்
சொல்.
வெளிச்சமோ வெறும் எழுத்து வழக்கு மொழி.
அதனால் எப்படி என்னை
உண்மையாக மொழி பெயர்க்க முடியும்?

அந்த நேரம் ஞாபகம் வருகிறது;
இந்தப் புகைப்பட நேரம்.

அந்த நேரத்திற்குத்தான்
என் மீது எவ்வளவு காதல்!

என்னிடமிருந்து விடைபெற்றுச் செல்லும் போது,
அதை நான் மறந்துவிடாமல் இருக்க
ஞாபகச் சின்னமாய்,
இந்த அழகிய கைக்குட்டையைத்
தந்துவிட்டுச் சென்றிருக்கிறது;
கிரணங்களால்
என்னையே 'எம்ப்ராய்டரி' செய்த கைக்குட்டை.

நீரில் தன் நிழலை
முதன் முதலாகக் கண்ட நார்சிஸ்ஸஸ்
அதைத் தழுவும் முயற்சியில்
நீரில் மூழ்கி இறக்கிறான். அவனே பின்னர்
நீரில் பூவாக மலர்ந்து நிற்கிறான்.

இதோ! இது என் பிம்பம்;
கால நதி நீரில் விழுந்த பிம்பம்.

ஆனால் இங்கே
ஓர் அதிசயம் நிகழ்ந்திருக்கிறது.
என் பிம்பமே
நார்சிஸ்ஸஸாகப் பூத்து ஸ்தம்பித்து நிற்கிறது;
நானே பார்த்துக் கொண்டிருக்க.

இந்த எண்ணங்களைக் கவிதை ஆக்கினேன்.

## நார்சிஸ்ஸஸ்

கண்ணாடிச் சமாதியிலிருந்து
என்னை வெறிக்கும் இது
என் பிணம் தான்

என்னிலிருந்து கிழிக்கப்பட்ட
ஒரு தேதித் தாள்
இங்கே... சுவரில்...
சிலுவை அறையப்பட்டிருக்கிறது

இறந்த காலத்தில்
சிறைப்பட்ட என் நிழலை
நிகழ் காலம் எட்டிப் பார்க்க
ஒரு சாளரமா இது?

அர்த்தப் பரிணாமமுடைய
சொல்லாகிய என்னை
வெளிச்சம்-தன்
எழுத்து வழக்கு மொழியில்
வெறும்
சொற் பெயர்ப்புச் செய்திருக்கிறது

கிரண நூலிழை பின்னிய
இந்தக் கைக்குட்டை
விடைபெற்ற ஒரு நேரத்தின்
ஞாபகச் சின்னம்

கால நதி நீரில் விழுந்த
என் பிம்பமே
'நார்சிஸ்ஸ'ஸாகப் பூத்து
ஸ்தம்பித்து விட்டது.

■

*25.9.85*




# சுவரில் ஓர் இதயம்

**வி**டுமுறையில்
வெளியூர்ப் பயணத்திற்குப் பின்
வீடு திரும்புகிறேன்.
முகம் கழுவிக் கொண்டிருக்கும் போது-

சுவர்க் கடிகாரம் ஒலிக்கிறது,
இன்னும் திறக்கப் படாத என் படிப்பறையிலிருந்து.

வெறும் ஒலியா அது? சிணுங்கல்; முறையீடு.

அரைகுறைக் கழுவலோடு
அவசர அவசரமாக அறையைத் திறந்து
கடிகாரத்தின் முகத்தைப் பார்க்கிறேன்.

டிக்டிக்... டிக்டிக்.

அந்த மொழி எனக்குப் புரியும்.

''இப்படி என்னைத் தனியாகச்
சிறையில் அடைத்து விட்டுப் போய்விட்டாயே.
எவ்வளவு கல்நெஞ்சம் உனக்கு?''

குற்ற உணர்வோடு நான் தலை குனிகிறேன்.

அதற்கும் எனக்கும் இடையே
ஓர் அந்தரங்கமான உறவு.
எல்லோரும் உறங்கிவிட்ட பிறகு
இரவின் தனிமையில்
எனக்குத் துணையாக இருக்கும் ஜீவன். ஆம். ஜீவன்தான்.
இதயத் துடிப்பும், வாயும் உண்டு அதற்கு.

இதயத் துடிப்பே அதற்கு மொழி.

டிக்டிக். இரண்டே வார்த்தைதான்.
ஆனால் இந்த இரண்டு வார்த்தைகளில்
எவ்வளவோ விஷயங்களைப் பேச அதனால் முடியும்.

மணி சொல்லும் போது மட்டும்
உற்சாகத்தில் பேச்சு பாட்டாகிவிடும்.

அதில் ஆணைகள்; எச்சரிக்கைகள்.
நினைவூட்டல்கள்.

''நேரமாகிவிட்டது; புறப்படு''

''விழித்தது போதும்; தூங்கப் போ''.

அதன் பேச்சைத் தட்டமுடிவதில்லை.
சில நேரங்களில்
சலுகை காட்டச் சொல்லிக் கெஞ்சுவதுண்டு.

மிகவும் கண்டிப்பான பேர்வழி.
எத்தனையோ முறை அதன் முட்களால்
கருணையின்றிக் குத்தப்பட்டிருக்கிறேன்.

சில நேரங்களில் அந்தக் குத்தலை
ஆவலோடு எதிர்பார்ப்பேன் ,
ஊசியின் ஸ்பரிசத்திற்காக ஏங்கும்
இசைத் தட்டைப் போல்.

டிக்டிக்... டிக்டிக்.

நாளின் ரத்தம் கணத் துளிகளாய்ச் சொட்டும் ஒலியா?

என் ஆயுள் குடம் ஒழுகும் ஓசையா?

கால தேவனின் நாமஜெபமா?

காலனின் காலடி ஓசையா?

யாருக்கென்று சொல்லாமல் வைக்கப்பட்டிருக்கும்
நேரக் குண்டா?

என் வாழ்க்கைச் சேலையை நெய்யும் தறி ஓசையா?

இனம் புரியாத விருந்தினர்கள் கதவு தட்டும் சப்தமா?

என் உண்டியலில் நாணயங்கள் விழும் ஒலியா?

நேரத் தோணியின் துடுப்போசையா?

என் சுவாசம் சொல்லும் கதைக்கு
'ஊம்' கொட்டலா?

பார்த்த முகங்களையே பார்த்து
வட்டமடிக்கும் வாழ்க்கையைச்
சலிக்கும் முட்களின் முணுமுணுப்பா?

ஒவ்வொரு நேரத்தில்
ஒவ்வொரு விதமாகத் தோன்றுகிறது.

ஒரு நாள் இரவு
கடிகாரத்தை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

திடீரென்று
முட்கள் என் ஞாபகங்களாகின்றன.
எண்கள்
என் இதயத்தில் பட்ட இனிமையான காயங்கள்.

ஞாபகங்கள் ஒவ்வொரு காயமாகச்
சுட்டிக் காட்டிய வண்ணம் சுழல்கின்றன.

டிக்டிக்... டிக்டிக்.
அவள் பிரிந்து சென்ற காலடி ஓசை.

கவிதை சுரக்கிறது.

ஞாபக முட்கள்
காயங்களைச் சுட்டி
வட்டமிடும்
என் ஏகாந்தத்தின்
இதயத் துடிப்பாக,
பிரிந்து சென்ற உன்
காலடி ஓசை

எதுவரை இந்தக் காலடி ஓசை
கேட்டுக் கொண்டிருக்கும்?
கடிகாரம் ஓடும் வரை.
எனவே 'சாவி இருக்கும் வரை' என்று
தலைப்பிடுகிறேன்.

காலம் என் மீது
கையெழுத்து இட்டுச்சென்ற தருணங்களில்
இதுவும் ஒன்று.

(இந்தக்கட்டுரை எழுதி முடிந்தவுடன்கடிகாரத்தைப்பார்த்தேன். திடுக்கிட்டேன். நீங்கள் நம்புகிறீர்களோ இல்லையோ- கடிகாரம் நின்றிருந்தது.)

■

*28.1.86*




# சிந்து நதி

**எ**ன் உணர்வுகள் பருவம் அடைந்த நாளிலிருந்து
கண் நதி மூலத்தைக் காண்பதில் தீராத ஆசை.

அந்த நதி எங்கிருந்து உற்பத்தியாகிறது?
ஏன் உற்பத்தியாகிறது? என்ற கேள்விகள்
அடிக்கடி என்னைக் குடைந்து கொண்டேயிருக்கும்.

கண்ணீரைப் பார்க்கும்போதெல்லாம்
நான் அதிகமாகப் பாதிக்கப்படுகிறேன்.

கண்களிலேயே அழகான கண்கள்
நீர் ததும்பி நிற்கும் கண்கள்.

கண்ணுக்கு அலங்காரம் மையல்ல; கண்ணீர்.

கண்ணுக்கு மட்டும்
மனிதன் நகையணிவதில்லை என்பது தவறு.
கண்ணீர்தான் கண்ணின் ஆபரணம்.
கண்ணே தயாரித்துக் கொள்ளும் ஆபரணம்.

கண்ணுக்குப் பேச மட்டுமல்ல,
எழுதவும் தெரியும்.
கண்ணீர்தான் மை.

கன்ன ஏட்டின் ஈரவரிகள்.
உணர்ச்சிகள் தம்மைத் தாமே எழுதிக் கொள்ளும்
திரவக் கவிகள்.

கண்ணீரும் புன்னகையும் முரண்களல்ல;
அந்தரங்க உறவுக்காரர்கள்

புன்னகைப் பூக்கள்
சில நேரங்களில்
கண்ணீர் மழையில் மலர்கின்றன.
புன்னகைப் பூக்களின் தேன்
சில நேரங்களில்
கண்கள் வழியாகத் துளிர்க்கிறது.

புன்னகையாக மலரும் கண்ணீரையும்,
கண்ணீராகச் சிந்தும் புன்னகையையும்
நான் பார்த்திருக்கிறேன்.

புன்கையிலும் கண்ணீரிலும்தான்
மனிதன் தட்டுப்படுகிறான்.

ஆனால் புன்னகை அவன் சத்திரம்,
கண்ணீர் அவன் வீடு.

மனிதனிடத்திலிருந்தே உதித்து
அவனை வளர்க்கும் ஜீவநதி கண்ணீர்.
அவன் பாவங்களைக் கழுவும் சொந்த கங்கை.

கண்ணீர்க் கரையில்தான்
மனிதனின்
உண்மையான நாகரிகம் வளர்ந்தது.

இந்த ஜீவநதியின் மூலத்தை
நான் தேடியபோது
அதன் மூலம் ஒன்றல்ல என்பதை அறிந்தேன்.

கண்ணீருக்குத்தான் எத்தனை வடிவங்கள்?
எத்தனை நிறங்கள்?
எத்தனை மணங்கள்?

கண்ணீரைச் சந்திக்கும்போதெல்லாம்
ஒவ்வொரு முறையும் அதன் புதுக்கோலம்
என்னைப் பிரமிப்பில் ஆழ்த்தும்.
எத்தனை வகையான தரிசனங்கள்!

ஒருமுறை பார்க்கிறேன்
- மூடிய இமை
மூடிய கடிதமாகத் தெரிகிறது.
கடிதத்தின் வாசகமே
முகவரியாகக் கசிகிறது!

மற்றொரு முறை பார்க்கிறேன்
-கண்ணீர் சவ ஊர்வலமாகத் தெரிகிறது.
இறந்துபோன கனவின் ஊர்வலம்!

மயானம் நோக்கிப் போகும்
மெளன ஊர்வலம்!

மற்றொரு முறை பார்க்கிறேன்-
உதிரும் ஒவ்வொரு துளியும்
நட்சத்திரமாகத் தோன்றுகிறது. சொந்த நாட்டை விட்டு
அகதிகளாய் வெளியேறும் நட்சத்திரங்கள்!

மற்றொரு முறை பார்க்கிறேன்
விழிகள் மார்பகங்களாகத் தெரிகின்றன.
பால் குடிக்கும் சிசுக்கள் இல்லாத அனாதை மார்பகங்கள்.
பாவம் சிசுக்களின் ஏக்கத்தில் துளிர்க்கின்றன!

மற்றொரு முறை பார்க்கிறேன்
-கண்ணீர் பாற்கடலின் பிறப்பாகத் தோன்றுகிறது.
அது அமுதமா? ஆலகாலமா?
அமுத நஞ்சு அது!
அலைக்கழிக்கப்பட்ட பாற்கடல்
தன் வேதனையில்
அமுதத்தை நஞ்சாக உமிழ்கிறது!

மற்றொரு முறை பார்க்கிறேன்
-மனிதனின் பாசம், அன்பு, காதல்
என்ற ஆகர்ஷணங்கள்,
தம்மையே பரிமாறும் பசியில்
தவிக்கும் ஆகர்ஷணங்கள்
மொழி பெயர்க்கப்படுகின்றன.
எந்தப் பார்வையும் புரிந்து கொள்ளும்
திரவ மொழியில்!

மற்றொரு முறை பார்க்கிறேன்
-கண்ணீர் மனிதனின் ஞானஸ்நான நீராகப்படுகிறது.

ஒவ்வொரு முறையும்
நான் கண்ட தரிசனங்களைப்
பதிவு செய்துகொண்டே வந்தேன்.
ஏறத்தாழப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு
இவற்றைக் கவிதையாக்கினேன்.

மூடிய கடிதத்தின் வாசகங்கள்
முகவரியாகக் கசிகின்றன

மயானம் நோக்கிக் கனவுச்சவ
மௌன ஊர்வலம் போகிறது

நாட்டைப் பிரிந்த அகதிகளாய்
நட்சத்திரங்கள் நடக்கின்றன

அணைக்கும் சிசுக்களின் கற்பனையில்
அனாதை முலைகள் துளிர்க்கின்றன

அலைக்கழிக்கப்பட்ட பாற்கடல்கள்
அமிர்தத்தை நஞ்சாய் உமிழ்கின்றன

பரிமாறப் பசிக்கின்ற ஆகர்ஷணம்
பார்வைக்கு மொழிபெயர்ப்பாகின்றது

ஞாபக வெளிச்சத்தின் சந்நிதியில் சுய
ஞானக் குளியல் நடக்கின்றது.

■

*26.2.86*



# இறாவணைக் கோடுகள்

**எ**ன் மனக் குகையின் இருளில்
பிரியமாய்ப் பிரகாசிக்கும்
அந்த இரண்டு ஓவியங்கள்.
உணர்ச்சித் தூரிகை
மங்காத வர்ணங்களால் வரைந்த ஓவியங்கள்.

இறந்த காலம்
தன் மாளிகைக்கு
என்னை அடிக்கடி அழைத்துக்கொள்ளப்
பயன்படுத்தும் வசியங்கள்.

வெறும் ஓவியங்களா அவை?
என் நிகழ்காலத்திலும் எட்டிப்பார்க்கும்
இறந்தகாலங்கள். என்றைக்கோ பட்ட காயங்கள்.

இன்றும் சுகமாக வலிக்கும் காயங்கள்.
புன்னகையால் அழும் காயங்கள்!

அந்த ஓவியங்கள்
நிலையாகத்தான் நிற்கின்றன.
ஆனால் அவற்றின் ஒவ்வோர் அணுவிலும்
உயிரின் பிரளயத் துடிப்பு!
பேச்சின்றி உறைந்த உதடுகள்.
ஆனால் அர்த்தங்களை உரத்து ஒலிக்கும் மௌனம்!

முதல் ஓவியம்
-அவள் நடந்து வருகிறாள்.
காலடியில் கிடக்கும் இதயங்களை
அலட்சியமாக மிதித்துச் செல்லும் ராஜநடை.
ஏன் இருக்காது?
சௌந்தர்ய சாம்ராஜ்யத்தின் மகுடம்!
பௌர்ணமியும் பூக்களும்
கப்பம் கட்டும் கன்னிமையின் கர்வம்!

இடையில் ஒயிலாக ஏந்திய குடம்.
பரவசத்தில் தளும்பிச் சிந்துகிறது.
இருக்காதா?
யாருக்குக் கிடைக்கும் அந்தச் சிருங்கார சிம்மாசனம்?
யாருக்கு வாய்க்கும்
அந்த அனுராக ஆலிங்கனம்?

என் பார்வை அவளை நோக்கிச் செல்கிறது-
ஒளிந்து மறைந்து நீரை நாடி நீளும் வேர்களாக.
அதன் தாகம் அவளுக்குத் தெரியாதா?

தெரியும்.
தாகத்தை அறியாத தண்ணீரா!

ஆனால்-தாகத்திற்கும்,
சம்மதிக்கும் தண்ணீருக்கும் இடையில்
பாறைகள்; இரக்கமற்ற பாறைகள்!
இப்படி ஒரு காலம்.

ஆண்டுகள் மலர்ந்து மலர்ந்து
உதிர்கின்றன. மற்றொரு காலம்.
மற்றொரு நேரம்.
மற்றொரு சூழ்நிலை. மற்றொரு காட்சி.
ஆனால், அதே பாத்திரங்கள்!

இரண்டாவது ஓவியம்
-அவள் நடந்து வருகிறாள்.
அவளேதான்.
ஆனால் அவளா இவள்? மகுடம் இல்லை.
சிம்மாசனம் இல்லை.
அவளுடைய கன்னிமைப் பூக்களோடு
அவள் கூந்தல் பூவையும்
பறித்து விட்டிருந்தது கருணையற்ற காலம்.

இடையில் ஒரு குழந்தை.
வாழ்க்கையிடம் பட்ட கடன் சுமை;
குழந்தை அழுகிறது. அவளுக்கும் சேர்த்து
பறிகொடுத்ததை அறிந்த
அவளுடைய வேதனைக்கு,
அதை அறியாத குழந்தையின் அழுகை
வடிகால்.

தயக்கத்தோடு நிமிர்கிறது தலை.
அவள் பார்வை என்னை நோக்குகிறது
-பரிதாபமாக ஏந்திய பிச்சைப் பாத்திரமாக!

என் இதயம் அழுகிறது.
எல்லா வசந்தங்களிலும் மலர்ந்த பூக்களை,
நட்சத்திரங்களை,
என்னை, எல்லாவற்றையும்
அந்தப் பாத்திரத்தில் போட்டு விட
இதயம் துடிக்கிறது.

ஆனால்-பாத்திரத்திற்கும் எனக்கும் இடையே
சுவர்கள்; தாண்ட முடியாத சுவர்கள்!
இப்படி ஒரு காலம்.

ஒவ்வொருவரைச் சுற்றியும்
அதட்டும் கோடுகள்.
இலக்குமணக் கோடுகள் அல்ல;
இராவணக் கோடுகள்!
உடல்கள் கோடுகளுக்குள் ஒடுங்கலாம்.
உள்ளங்கள்?

இரண்டு அனுபவங்களும்
சிந்தனையில் கொஞ்சம் கொஞ்சமாக
வடிவம் எடுக்கின்றன.
வெளியே வர நச்சரிக்கின்றன.
காலம் கனிகிறது.
என் தூரிகை தினவெடுத்துப் பரபரக்கிறது.
வார்த்தைகள்

வர்ணங்களாகக் குழைந்து கெஞ்சுகின்றன.
பிரமாவேசத்தோடு வரைகிறேன்.

புதிய பூப்பின் கர்வமாக
மணம் திரியும் பாதையில்
நீர் தளும்பிச் சிந்தும்
குடமேந்தி
நீ நடந்து வந்தபோது
என் பார்வைகள்
உன்னை நோக்கி நீண்ட
வேர்கள்
அது அன்று

முறையிடும் குரலாகச்
சருகுகள் புலம்பும் பாதையில்
சத்தம் தளும்பிச் சிந்தும்
குழந்தையை ஏந்தி
நீ நடந்து வருகிறபோது
உன் பார்வைகள்
என்னை நோக்கி ஏந்திய
பிச்சைப் பாத்திரங்கள்
இது இன்று

இருவரும்
சடங்குகளின் கைதிகள்

இரண்டு நிகழ்ச்சிகளிலும்
அவள் நடந்து வந்த பாதையை
அவளுக்குப் பொருத்தமான பின்னணியாக
குறியீடாக அமைத்தேன்.

இரண்டு ஓவியங்களையும்
எதிரும் புதிருமாக அமைத்தேன்.

ஒன்று மற்றொன்றின் பிம்பம்.
பிரதி பிம்பம் அல்ல; முரண் பிம்பம்.

ஒன்று மற்றொன்றோடு ஒப்பிட்டுக் கொண்டு,
தங்களுக்குள்
மின்சார இணைப்பை ஏற்படுத்திக் கொண்டு ஜ்வலிக்கும்
ஓவியங்கள்.

என் மனக் குகையின் இருளில்
பிரியமாய்ப் பிரகாசிக்கும் ஓவியங்கள்.

நாட்களின் தூசி படிந்தால் என் கண்ணீரால் கழுவிப்
புதுப்பிக்கும் ஓவியங்கள்.

■

*23.1.85*




# மரணம் முற்றுப்புள்ளி அல்ல

**ம**ரணத்திற்குப்பிறகு என்ன ஆவோம்?
ஏதாவதொரு கணத்தில்
ஒவ்வொருவரையும் குடைகிற கேள்வி.

இந்தப் பயங்கரமான கேள்வியைச்
சந்திக்க விரும்பாமல்
எத்தனை முறை தவிர்த்திருக்கிறோம்.
எண்ணப் பாதையில் சில நேரம்,
இது எதிர்ப்பட்டு விட்டால்,
அப்பொழுது தோன்றி விரியும்
மர்மமான அகண்டாகார அந்தகாரத்தில் அகப்பட்டுச்
சிந்தனையின் மூச்சுத் திணற
எத்தனை முறை மிரண்டிருக்கிறோம்.

வழிப்பறிக் கொள்ளைக்காரனைப் போல்
ஒரு நாள், என்னை
இக்கேள்வி வழிமறித்துக் கொண்டது.
தப்பிக்க முடியாதபடி அகப்பட்டுக் கொண்டேன்.

எதைத் தருவது?
என்னிடமும் சில விடைகள் கைவசம் இருந்தன.
வெறும் சில்லறைகள்; பழைய நாணயங்கள்.
இந்தக் கேள்வியிடம் இவை
செலாவணி ஆகும் என்று தோன்றவில்லை.

திருப்தியாக ஏதாவது தராவிட்டால்
இந்த ஈவிரக்கமில்லாத கேள்வி
என்னை விழுங்கிவிடும் என்று தோன்றியது.

இந்த மாதிரி குழப்பமான நேரங்களில்
நான் அடைக்கலம் தேடுவது
சர்ரியலிசத்திடம்தான்.

சர்ரியலிசம்
மனத்தை நம் நட்டுவாங்கத்திற்கு ஆடச் சொல்லி
பலவந்தப்படுத்தாமல்,
அதன் போக்கில் ஆடச் சொல்லி
அவிழ்த்து விடும் சுதந்திரம்;
அடி மனத்தில் உறங்கிக் கிடக்கும் அதிசயங்களைத்
தட்டி எழுப்பும் பள்ளி எழுச்சி.

ஒவ்வொருவருக்கும்
ஒரு பாற்கடல் இருக்கிறது; மனம்!
அதன் அடியாழத்தில் கிடக்கும் ஐசுவரியங்கள்

நாமே அறியாதவை.
கடைவதற்கு மந்தரமும் வாசுகியும் கிடைத்துவிட்டால்
ஒவ்வொன்றாக வெளியே கொண்டு வந்து விடலாம்.

இந்தக் கேள்விக்கும்
மனத்திடம் ஏதாவது விடை இருக்கும்.
அதை வெளியே கொண்டு வர வேண்டும்.

என் சிந்தனையின் செயற்கைச் சுடர்களை
அணைத்து இருட்டாக்கிக் கொண்டேன்.
தத்துவங்களின் வாயை அடக்கி
அமைதியாக்கிக் கொண்டேன். சுத்த சூனியம்; அமைதி.

கேள்வியை மட்டும் ஒருமுகப் புள்ளியாக்கி
ஆழ்ந்த தியானத்தில் மூழ்கினேன்.
மனம் காட்டும் காட்சிகளுக்குக் காத்திருந்தேன்.

சிறிது நேரம் கழித்து ஒரு படிமம் தோன்றியது;
கண்ணீர்த் துளி சொட்டும் இமை.

இன்னும் சிறிது நேரம் கழித்து
மற்றொரு படிமம் தோன்றியது;
ஒரு மணியிலிருந்து
கயிறு அறுந்து விழுகிறது. மணியின் நாவிலிருந்து
நட்சத்திரங்கள் உதிர்கின்றன.

சிறிது நேரம் கழிந்தது;
மற்றொரு படிமம் உதித்தது; மிகப் பெரிய பாதம்;
பாத ரேகைகளோடு.
பிறகு என் தியானம்;
கலைந்துவிட்டது.

மனம் தந்த படிமங்களுக்குப்
பொருள் காண முனைந்தேன்.

மனம் அறிந்த ஒரே மொழி
படிமம்தான்.
ஒவ்வொரு அனுபவத்தையும் மனம்
காட்சிப் படிமமாக்கியே
பதிவு செய்து கொள்கிறது.
கருத்தோ, உணர்வோ
நுண் பொருளாக மனத்தில் படிவதில்லை.
மனம் பேசும் போதும்
படிம மொழியிலேயே பேசுகிறது.

மனத்தின் படிமங்களுக்கு
நம் அனுபவங்கள் மட்டுமே காரணமில்லை.
நம் மூதாதையரின் அனுபவங்களும்
பாரம்பரியச் சொத்தாகப் படிம வடிவில்
நம் மனத்திற்கு வந்து சேர்வதுண்டு.
உளவியல் மேதை யுங்
இத்தகைய படிமங்களை
மூலமுதற் படிமங்கள் (Primordial images) என்றும்
முன் மாதிரிப் படிமங்கள் (Archetypal images)
என்றும் அழைக்கிறார்.

இந்தப் பின்னணியில்தான்
மனப் படிமங்களுக்குப்
பொருள் காண வேண்டும்.

என் மனம் காட்டிய முதல் படிமம்
கண்ணீர்த் துளி சொட்டும் இமை.
எளிதாகப் பொருள் விளங்கியது.

மரணம், கண்ணீர் வடிக்கும் சோகநிகழ்ச்சி.
எனவே மனத்தின் அகராதியில்
மரணத்தைக் குறிக்கும் வார்த்தையாக
நீர்த்துளி இமை பதிவானதில் அதிசயமில்லை.

ஆனால் இத்தகைய மனப் படிமங்களுக்கு
மேலோட்டமான பொருள் மட்டுமே
இருப்பதில்லை.
இவை பன்முகப் பொருள் ஆற்றல் உடையவை;
குறிப்பாக இயங்குபவை.

எனவே மீண்டும் துப்பறிந்தேன்.
கண்ணீர்த் துளி தான் வசித்துக் கொண்டிருந்த
இமையை விட்டுப் புறப்படுகிறது;
வெளியேறுகிறது.

இப்போது புரிகிறது.
மரண நிகழ்ச்சியால் ஆன்மா
தான் வசித்துக் கொண்டிருந்த
உடலை விட்டுப் புறப்படுகிறது;
வெளியேறுகிறது.

அடுத்த படிமம்
கயிறறுத்துவிட்டு
நட்சத்திரங்களை உதிர்க்கும் மணி.

மரணத்தோடு
மணிக்குள்ள தொடர்பு புரிகிறது.
சாவு மணி என்கிறோம்.
கிறித்தவர்கள் மரணத்தை அறிவிக்க
தேவாலயத்தில் மணி அடிப்பார்கள்
இவையெல்லாம் மணிப் படிமத்திற்குக் காரணம்.

கயிறு அறுந்து விழுந்ததே!
என்ன அர்த்தம்?
புரிகிறது. மணியை அசைத்துக் கொண்டிருந்த
ஒலித்துக் கொண்டிருந்த கயிறு
அறுந்துவிட்டது.
உடலை இயக்கிக் கொண்டிருந்த மூச்சு
அறுந்துவிட்டது.
மணி ஓசை அடங்கி விட்டது.
உடலும் சப்தமடங்கிவிட்டது;
வெற்று ஆரவாரம் நின்றுவிட்டது.

நட்சத்திரங்கள்!
ஓ! அவை ஒளியின் குறியீடுகள்!
உன்னதத்தின் சின்னங்கள்.
இந்தப் பௌதீக உடல் வாழ்க்கை
வெறும் ஓசை வாழ்க்கை.
ஆனால் கதை இதோடு முடிவதில்லை.
தொடர்கிறது. உன்னதமான ஒளியாக!
அமரத்வமுடைய மௌனமாக!

அடுத்த படிமம்
ரேகைகள் பளிச்சிடும் பெரிய பாதம்.
இந்தப் படிமம்
கொஞ்சம் சிரமப்படுத்தியது.
நெடுநேரச் சிந்தனைக்குப் பிறகுதான்
இந்தப் படிமம் வாசல் திறந்து வழிவிட்டது.

பாதம் எதைக் குறிக்கும்?
நடை; பயணம்.
பெரிய பாதம்?
ஆம் பெரிய பயணம்.
மரணம் முடிவிடம் அல்ல;
மற்றொரு பெரிய பயணத்திற்கான திருப்பம்.

ரேகை? நம்முடைய ஆயுட்பாதை.
மரணத்திற்குப் பிறகுள்ள
நெடும் பயணத்தை நோக்க
நம் ஆயுள், பாதத்தின் ரேகைக்குச் சமம்.

மரணம் முற்றுப்புள்ளி அல்ல;
அரைப் புள்ளிதான்.

மனப் படிமங்கள் தந்த விடை
பிரமிப்பைத் தந்தது. இந்த அனுபவத்தைக் கவிதை ஆக்கினேன்.

> மரண இமைகளிலிருந்து
> நான் துளிர்த்து வழிவேன்
> மூச்சுக் கயிறறுந்த

மணியின் நாவிலிருந்து
நட்சத்திரங்கள்
மௌனமாக உதிரும்

ஆயுட் பாதை
முழுவதும்
என் பாதத்தில்
ரேகையாகிவிடும்

இத்தோடு நான்
கவிதையை முடிக்கவில்லை.
இந்தப் படிம விடைகளின் சாரத்தை,
ஒட்டு மொத்தமான குறிப்பைக்
கவிதையின் முத்தாய்ப்பாய் எழுதினேன்.

வேஷத்தில் வசித்த
அர்த்தம்
திரையின் உட்புறம்
தன் உடலைத் தேடிப்
புறப்படும்.

அர்த்தம்
ஒவ்வொரு மொழியும் தரும்
ஏதாவது ஒரு சப்தத்தை- சொல்லைத்
தனக்குரியதாக ஏற்றுக் கொள்வதைப்போல்,
ஆன்மா வாழ்க்கை நாடகத்தில்
தனக்கு அளிக்கப்பட்ட பாத்திரத்திற்கு
ஏற்ற வேஷத்தைத் தரித்து ஆடுகிறது.
நாடகம் முடிந்ததும்
நடிகர்கள் வேஷத்தைக் கலைத்துவிட்டுத்

தங்கள் சுயவடிவத்திற்கு வருவதைப் போல்
ஆன்மாவும் நாடகம் முடிந்ததும்
திரையின் உட்புறம்
தன் சுய வடிவத்தைத் தேடிப் புறப்பட்டு விடுகிறது.

மரணம் என்னை
முடித்து விடாது என்ற ஞானம்
மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் தந்தது.
இந்தக் கவிதைக்கு
'எனக்கு அந்திகள் இல்லை' என்ற
தலைப்பைச் சூட்டினேன்.

■

*31.10.84*




## மலட்டுத் தாய்

**எ**ன் உறவினர் குடும்பத்தில்
ஒரு பெண்ணுக்குத் தலைப்பிரசவம்.
அச்ச ஆவலோடு காத்திருக்கிறோம்.
அந்தப் பயங்கரமான விபத்து
அறிவிக்கப்படுகிறது.

''குழந்தை இறந்து பிறந்திருக்கிறது''.

நான் இடிந்து போகிறேன்.
இதயத்தில் வினாப் புயல்கள்;
வேதனை அலைகள்.

பிறப்பு, பிறகு இறப்பு
இதுதானே நியதி?

இதென்ன விபரீதம்!
இயற்கைக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா?

பிறப்பில்லாமல் இறப்பா?
முதலில் இறப்பென்றால்
என்ன அர்த்தம்?

பிறப்பென்றால்
உயிர்ப் படைப்பு அல்லவா? உயிரற்றதைப்
பிறப்பு என்று எப்படிச் சொல்வது?

மொழியே! வெறும் சத்தப் பகட்டே!
வாயால் ஆகாதவளே!
எப்படிச் சொல்வாய் இதை?

முதலில் முடிவு;
பிறகு தொடக்கம்!- சரித்திரமே!
இந்தக் கதையை எப்படி எழுதுவாய்?

முதலில் செலவு; பிறகு வரவு!
ஜனன மரணங்களைப்
பதிவு செய்யும் அதிகாரிகளே!
இந்தக் கணக்கை எப்படி எழுதப்போகிறீர்கள்?

எப்படிச் சொல்வது இதை?
அணைக்கப்பட்டு
ஏற்றப்பட்ட தீபமா இது?
அணைக்கப்பட்டதென்றால் எது அணைக்கப்பட்டது?
ஏற்றப்பட்டதென்றால்
எது ஏற்றப்பட்டது?

குழப்பம்; மயக்கம்.

வயிற்றில் குழந்தை கனக்க,
நெஞ்சத்தில் கற்பனைகள் கனக்கப்
பத்து மாதச் சுமை தாங்கி ஆகி-

தன்னைக் கிழித்துக் கொண்டு பிறப்பது
இன்பம் என்பதற்காக அதன் வருகைத்
துன்பத்தை ஏற்றுக் கொண்டு
பொறுத்துக் கொண்ட அந்தப் பெண்-

இவ்வளவு வேதனைகளுக்கு ஈடாகத்
தான் பெற்றெடுத்தது?
ஒரு பிணம் என்று அறிந்தபோது
எப்படி உடைந்து நொறுங்கிப் போயிருப்பாள்

உலகமே!
அவளை எப்படி அழைக்கப் போகிறாய்?
அவள் தாயா? மலடியா?

புதிர்களின் நாயகனே!
இதென்ன கோரமான புதிர்?
என்ன அர்த்தம் இதற்கு?

அவளுடைய மனம்!
எவ்வளவு கொடூரமான
பூகம்பம் நடந்துவிட்டது அங்கே!

தனக்குள்ளிருந்தே
ஒரு புதையலை எடுக்கப் போகும்

ஓர் அதிசய ஆனந்த அனுபவத்திற்காக
அவள் எவ்வளவு ஆவலோடு காத்திருந்திருப்பாள்!

அவள் பிரசவம்!
பிரசவமா அது? ஓநாய்!
சமாதியைத் தோண்டிச்
சவத்தை இழுத்த ஓநாய்!
என்ன கொடூரம் இது!

கருப்பையில் சவஅடக்கம்!
அப்படியென்றால்
ஒரு சமாதி பிரசவித்திருக்குமோ?
என்ன விபரீதம் இது?

பருவத்தின் சீதனங்கள்,
தாய்மையின் வரங்கள்
இவ்வளவும் அவளுக்குத் தரப்பட்டது
ஒரு பிணத்தைப் பெறுவதற்காகவா?

ஓர் அர்த்தமற்ற சொல்லை-அசையை
உச்சரிப்பதற்கா காலம் அவளை வாயாக்கியது?
எவ்வளவு பைத்தியக் காரத்தனம் இது!

இறைவா!
உயிர் மெய் எழுத்துக்களை எழுதும்
ஜீவ எழுத்தாளனே!
அவள் கருப்பையில் மட்டும் உன் பேனா
வெறும் மைத்துளியை உதறியதோ?

பிரபஞ்சத் தோட்டக்காரனே!
உன்னைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை.

பாடுபட்டுப் பண்படுத்திய ஒரு பருவப் பாத்தியில்
ஒரு பூவின் பூப்புப் புல்லரிப்புக்காக
ஏங்கிக்கிடந்த பாத்தியில்
எலும்பை அல்லவா நட்டுவிட்டாய்?

இந்தக் குரூரமான நடவையும் செய்துவிட்டு
அவள் கண்களில் எதற்குக்
கண்ணீரையும் சுரக்க வைக்கிறாய்?
இப்போது அவளுக்கு
எதற்கு இந்த விழிப் பூவாளிகள்?

அவளுடைய கண்ணீர்!
அது கண்ணீர் அல்ல; பால்!
மார்பகம் பயனற்றுப் போய்விட்டதால்
பாதை திருப்பி அனுப்பப்பட்ட பால்!

அவளுடைய கண்ணீர்!
அது கண்ணீர் அல்ல;
கொட்டுவதற்காக
அவள் ஆசை ஆசையாகச் சேகரித்து வைத்த
செல்லக் கொஞ்சல்கள்;
தாலாட்டுக்கள்!
வீணாகி விட்ட வேதனையில்
அவை உருகி வழிகின்றன
விழிகளின் வழியாக!

என்னைப் பெண்ணாக்கித்
துடிக்கச் செய்த அனுபவம் இது.
இந்த வேதனையை
நான் கவிதையாகப் பிரசவித்தேன்.

எனக்குள்ளிருந்து
புதையல் எடுக்கக்
காத்திருந்தேன்
ஓ... என் பிரசவம்
சமாதியைத் தோண்டிய
ஓநாய்

ஒரு சமாதி பிரசவித்ததாலா
இது என்
கருப்பையில் அடக்கமானது?

இந்த அசையை
உச்சரிக்கவா
காலம் என்னை
வாயாக்கியது?
ஜீவ எழுத்தாளனே!
உன் பேனா என்னில்
மைத்துளி உதறியதோ?
என் ஏக்கப் பாத்தியில்
எலும்பை நட்டவனே?
எதற்காக இந்த
விழிப்பூவாளிகள்?

கண்ணீர்... இந்தக் கண்ணீர்
பாதை திருப்பி
அனுப்பப்பட்ட பால்
உருகி வழியும் என்
செல்லக் கொஞ்சல்கள்...
தாலாட்டுக்கள்

கவிதைக்கு என்ன தலைப்பை இடுவது?
தாயைக் கோயில் என்பார்கள்;
குழந்தையைத் தெய்வம் என்பார்கள்.

இங்கோ ஒரு கோயில் உருவாயிற்று.
தெய்வம் செத்துப் போய்விட்டது.
தெய்வம் இல்லாத கோயில்!
எனவே 'நாத்திகக் கோயில்' என்று தலைப்பிட்டேன்.

■

*24.7.85*




# சிம்மாசன நோய்

**நீ**ரிலிருந்து பிறந்தவன் மனிதன்.
அதனால்தானோ அவனுக்கு நீரின் குணம்?

அவனை எத்தனை தடவை
சூடேற்றினாலும்
மீண்டும் குளிர்ந்து விடுகிறான்.
எத்தனை முறை மேலே ஏற்றி வைத்தாலும்
கீழே இறங்கிவிடுகிறான்;
பள்ளங்களை நோக்கியே பாய்கிறான்.

மனிதனுடைய சமூக வரலாறும்,
அரசியல் வரலாறும்
இந்த உண்மையை உறுதிப்படுத்துகின்றன.

தீமை கட்டுக்கடங்காமல்
தலைவிரித்து ஆடும்போது
நன்மையின் சக்தி
அதை அடக்குவதற்கு
ஆவேசம் கொண்டு எழுகிறது.
புரட்சி வெடிக்கிறது.

எல்லாம் நன்மையில் முடிந்தது என்று
இந்தக் கதை சுபமாக முடிவதில்லை;
தொடர்கிறது.

ஒடுக்கியவர்கள் ஒடுக்கப்படுகிறார்கள்.
சிம்மாசனம் துடைக்கப்படுகிறது.
அதில் புதியவர்கள் அமர்கிறார்கள்.
ஆனால் என்ன நடக்கிறது?

சிம்மாசன நோய்
அவர்களையும் தொற்றிக் கொள்கிறது.
அப்புறம் பழைய குருடி கதைதான்.

மூவாசையை விடப் பெரிய ஆசை
சிம்மாசன ஆசை.
அதனால்தான் மூன்றையும் கொடுத்தாவது
அதைப் பெற முயலுகிறான் மனிதன்.

அதிகாரம் விசித்திரமான சாராயம்.
அதைக் குடிக்கிறவன்
தன்னை மறப்பதில்லை;
பிறரை மறந்து விடுகிறான்.

நல்லவர்கள் கூடச்
சிம்மாசனத்தில் ஏறிய பிறகு
கீழே இறங்கிவிடுகிறார்கள்.

சிம்மாசனத்தைப் பிடித்துக் கொள்கிறவன்
ஒரு பேயைப் போல
அதைப் பிடித்துக் கொள்கிறான்.
அதை விட்டுப் போக
அவன் விரும்புவதில்லை.
அதில் தொற்றிக்கொண்டு இருப்பதற்காக
எதையும் செய்யத் தயாராகிவிடுகிறான்.

ஒடுக்குமுறைக்கு எதிராகக்
கிளர்ந்தெழுந்த ஒடுக்கப்பட்டவனே
சிம்மாசனத்தில் அமர்ந்ததும்
ஒடுக்குகிறவனாக மாறி விடுகிறான்.

ஒடுக்கும் வர்க்கம், ஒடுக்கப்படும் வர்க்கம்,
இந்த இரண்டு வர்க்கங்களின் போராட்டம்தான்
மனித சரித்திரம்

ஒடுக்கப்பட்ட வர்க்கத்தைச் சார்ந்தவனே
பதவியில் அமர்ந்ததும்
ஒடுக்கும் வர்க்கத்தவனாக மாறி விடும் அவலம்
என் இதயத்தை
எப்போதும் கிழித்துக் கொண்டே இருக்கும்.
இதைக் கவிதையாக்க வேண்டும் என்ற தினவு
இருந்து கொண்டேயிருந்தது.



6

ஆனால் இந்தக் காய்ந்த உண்மைகளை
எம்படிக் கவிதைக்குள் கொண்டு வருவது?

சரியான வடிவத்திற்காகச் சிந்தித்தேன்.
வெறும் உவமைகளும், உருவகங்களும்
பலவீனமானவை. இந்தச் சுட்ட சட்டியைக்
கீழே போட்டுவிடும் என்று
எனக்குப் பயமிருந்தது.

எனவே, சக்தி வாய்ந்த
ஆழ்மனப் படிமங்களை நாடினேன்.

ஆழ்மனப் படிமங்களை
முக்குளித்துக் கொண்டு வந்து தரும்
சர்ரியலிஸத் தியானப் பயிற்சி எனக்கிருந்தது.
தியானத்தில் ஆழ்ந்தேன்.

சிறிது நேரத்திற்குப் பிறகு
இருளிலிருந்து ஒரு சாமரை
பிரகாசமாகத் தோன்றியது.
அதைத் தொடர்ந்து சிங்கத்தின் பிடரி முகம்.

அப்புறம் மேலே இருந்து
ஒரு பழம் விழுந்தது.
கர்ஜித்த சிங்கத்தின் வாயை அடைத்தது.

பிறகு செத்துக் கிடக்கும்
சிங்கத்தைச் சுற்றிச்
சுண்டெலிகள் கும்மி அடிக்கும் காட்சி.

என் தியானம் கலைந்தது.

ஓ! எத்தகைய அற்புதமான படிமங்கள்!

சாமரை-அரசனுக்கு வேர்க்காமல்
விசிறிக் கொண்டே இருக்கும் சாமாரை!
அடிமை வர்க்கத்திற்கு எவ்வளவு அழகிய குறியீடு!

கர்ஜிக்கும் சிங்கம்
ஆளும் வர்க்கத்திற்குப் பொருத்தமான குறியீடு.

வாயை அடைக்கும் பழம்?
ஆழ்ந்த, மர்மமான, படிமம்.
சிந்தித்துச் சிந்தித்து...
யுரேக்கா! சூழ்நிலை! புரட்சி கனிவதற்கு,
வெற்றி பெறுவதற்கு வாய்ப்பான சூழ்நிலை!

சுண்டெலிகளின் கும்மாளம்
சுலபமாகவே புரிந்தது.

இப்போது
என் படிமப் பாத்திரங்களை வைத்துக் கொண்டு
'திரைக் கதை' எழுத ஆரம்பித்தேன்.

> அசைந்து அசைந்து
> ஒருநாள்
> சாமரைகளுக்கு
> வியர்க்கத் தொடங்கியது
> துளிகள் சிதறின

அடிமை வர்க்கம்
உணர்வு பெற்று விட்டது.
'வியர்வை'க்கு விசிறும் சாமரைக்கே,
'வியர்க்கத் தொடங்கிவிட்டது.

வெண்குடைக் கபாலங்களின் அருகே
இற்றுக் கிடந்த சிங்கம்
எச்சில் தெறித்ததாய் எண்ணி
கர்ஜிக்க முயன்று
இருமியது

ஆளும் வர்க்கம்
ஏற்கெனவே பலவீனப்பட்டிருந்தது.
இதுதானே புரட்சி வெற்றியடையும் தருணம்.
இந்த நிலையிலும் ஆளும் வர்க்கம்
தன்னைக் காப்பாற்றிக் கொள்ளக்
கடைசி முயற்சி செய்கிறது.
அதனாலேயே அது மேலும் பலவீனமாகிறது.

சத்த அதிர்ச்சியில்
எஞ்சியிருந்த பிடரி மயிரும்
உதிர்ந்தது.

சூழ்நிலையும் வாய்ப்பாக இருந்தது.
சிங்கத்தின் கர்ஜிக்கத் திறந்த வாயை
பழம் விழுந்து அடைக்கிறது.

பொக்கை வாயை
விழுந்து அடைத்தது
பூகோளப் பழம்

பிறகென்ன?

மூச்சுத் திணறிச்
செத்தது சிங்கம்
நழுவிய பழம்
ஆகர்ஷணக் காம்பில் போய்
ஒட்டிக்கொண்டது

ஏனென்றால்
மீண்டும் ஒரு சிங்கத்தின் வாயை
அ;ஸ,டப்பதற்காகக் காத்திருப்பதற்கு.

உண்மையான கதை
இப்போதுதான் தொடங்குகிறது.
அஞ்சி ஒடுங்கிக் கிடந்த சுண்டெலிகளுக்கு
இப்போது கொண்டாட்டம்.

> சவத்தைச் சுற்றிச்
> சுண்டெலிகளின்
> கும்மாளக் கும்மி

அவல நாடகம் தொடங்குகிறது.

> சந்தடியில்
> ஒரு சுண்டெலி
> சவத்தைக் கடித்துக்
> கசிந்த கறுப்பு ரத்தத்தை
> நக்கியது

அவ்வளவுதான்.
அங்கே ஒரு பயங்கரம் நிகழ்ந்தது.

> உடனே-
> தடித்துப் பரிணமித்துப்
> பிடரிமயிர் பீறிடக்
> காடெலாம் அதிர
> கர்ஜனை செய்தது

சுண்டெலியே சிங்கமாகிவிட்டது;
கறுப்பு ரத்தத்தைக் குடித்ததால்.

பிறகென்ன நடக்கும்?
வழக்கம் போலத்தான்.

> விலவிலத்த சுண்டெலிகள்
> கூச்செறிந்த மயிர் உதிர
> மூச்சிறைக்க ஓடிப்போய்
> ஒளிந்தன வளைகளுக்குள்

இறுதிக் காட்சி.

> எலி மயிர்ச் சாமரைகள்
> அசையத் தொடங்கின
> அசைந்து அசைந்து...

இறுதிக் காட்சியா இது?
இல்லை.
இந்தக் கதையின் தொடக்கக் காட்சிதான்.

மீண்டும் அதே கதை நடக்கும்;
மீண்டும்... மீண்டும்.
இந்தப் படிமங்களுக்கு இடையே
ஓர் உறவு இருப்பதையும்
வியப்போடு கவனித்தேன்.

சாமரை;
சாமரை போன்ற பிடரி மயிர்ச் சிங்கம்.
சிங்கம் சாப்பிடாத,
சாப்பிட விரும்பாத பழம்.
கனி-கனிந்த நேரத்திற்கு?
சிங்கம் சுண்டெலிக் கதை.
ஆழ்மனப் படிமங்களின் பண்பு இது.

ஆம்; இந்த ஆழ்ந்த, அந்தரங்கமான உறவு
இந்த அவல நாடகப் பாத்திரங்களின்,
நிகழ்ச்சிகளின் அந்தரங்கமான உறவைக் காட்டுவது.

இதுதான் 'பால் வீதி'யில் உள்ள
என் 'வியர்க்கும் சாமரைகள்' என்ற கவிதை
பிறந்த கதை.

■

*14.5.86*




# ஆதியிலே வார்த்தை இருந்தது

ஒரு கவிதை எழுதிக் கொண்டிருந்தேன்.
ஓரிடத்தில் என் கருத்தை வெளிப்படுத்துவதற்குச்
சரியான வார்த்தை தேவைப்பட்டது.
சிந்தித்தேன், சிந்தித்தேன்;
நெடு நேரமாகியும்
அந்த வார்த்தை கிடைக்கவில்லை.

ஒரு கருத்தை அல்லது உணர்வை
வெளிப்படுத்தச்
சரியான வார்த்தையைத் தேடுவது என்பது
பெண்ணுக்கு
நல்ல வரன் தேடுவது போன்றதுதான்.

'ஜாதகம்' பொருந்த வேண்டும்.
பத்துப் பொருத்தமும் இருக்க வேண்டும்.

இதற்கெல்லாம் மேலாக
நம்முடைய 'பெண்',
கண் கலங்காமல் இருக்கும்படி
'அவன்' நடந்து கொள்ள வேண்டும்.

இருவரும் எக்காரணத்தாலும்
பிரியக் கூடாது.

சொல்லும் பொருளும்
ஆணும் பெண்ணும் போன்றவை.

சொல்லும் பொருளும்
ஆணையும் பெண்ணையும் போலச்
சேர்ந்து வாழ வேண்டியவை.

ஆணின்றிப் பெண்ணில்லை;
பெண்ணின்றி ஆணில்லை.
சொல்லின்றிப் பொருளில்லை;
பொருளின்றிச் சொல்லில்லை.

எது முதல்?
சொல்லா, பொருளா?

உலகம் தோன்றி,
அதில் உள்ள பொருளெல்லாம் தோன்றி,
மனிதன் தோன்றி,
மொழி தோன்றிய பிறகுதானே
சொல் தோன்ற முடியும்?

எனவே பொருள்தான் முதல்
என்று நாம் நினைப்போம்.

ஆனால் பைபிளோ
சொல்தான் முதல் என்கிறது

ஆதியிலே வார்த்தை இருந்தது.
அந்த வார்த்தை தேவனிடத்தில் இருந்தது.
அந்த வார்த்தை தேவனாயிருந்தது.

அவர் ஆதியிலே
தேவனோடிருந்தார்.

சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று;
உண்டான தொன்றும்
அவராலே யல்லாமல் உண்டாகவில்லை.

என்று சொல்லும் யோவான்,
'அந்த வார்த்தை மாம்சமாகியது' என்கிறார்.

இது இயேசு பெருமானைப் பற்றிய
வருணனை என்றாலும்
சொல் முதலில் தோன்றியது,
பிறகுதான் பொருள் தோன்றியது
என்ற குறிப்பும் இதில் இருக்கிறது.

ஆண் முன்னரே படைக்கப்பட்டு
ஒரு பெண்ணுக்காகக் காத்திருப்பது போல்
ஒவ்வொரு சொல்லும்
இறைவனுடைய சித்தத்தில் உண்டாகி
அவற்றிற்கான பொருளுக்காகக் காத்திருக்கிறது.

மொழியை மனிதன் உண்டாக்கினான்
என்பதுதான் பொது நம்பிக்கை.

ஆனால் மொழியைப் படைத்தவன் இறைவன் என
மெய்ஞ்ஞான நூல்கள் கூறுகின்றன.

ஆதத்தைப் படைத்த இறைவன்
அவருக்கு எல்லாப் படைப்புகளின் பெயர்களையும்
கற்றுக் கொடுத்தான் என்று
குர்ஆன் கூறுகிறது.

ஒவ்வொரு பொருளுக்கும்
பெயர் வைக்கும் ஆற்றலை
இறைவன் மனிதனுக்குள் வைத்து விட்டான்.

அதனால்தான் மனிதன்
பொருள்களைப் பார்த்தவுடன்
அதற்கான பெயரை-அதாவது சொல்லை
எளிதாக உண்டாக்க முடிந்தது.

இருப்பதுதான் தோன்றும்;
இல்லாத எதுவும் தோன்றுவதில்லை என்பது
மெய்ஞ்ஞானம் மட்டுமல்ல, விஞ்ஞானமும்தான்.

மற்றொரு வகையிலும்
சொல்தான் முதல் என்று கூறலாம்.
'ஓம்' என்ற பிரணவத்திலிருந்து
பிரபஞ்சம் உண்டானதாக
உபநிடதங்கள் கூறுகின்றன.

இறைவன்,
'ஒளி தோன்றுக' என்றான்;
'ஒளி தோன்றிற்று' என்று
பைபிள் கூறுகிறது.

எனவே 'தோன்றுக' என்ற சொல்லே
முதலில் தோன்றுகிறது.

அந்த ஆணையால்
ஒளி தோன்றியது.
இறைவனுடைய நாமங்களே
ரூபங்களாயின என்கின்றன உபநிடதங்கள்.

இறைவனுடைய பெயர்களே
படைப்புகளாயின என்கிறது சூஃபித்துவம்.

இங்கு நாமம், பெயர் என்பது
பண்பைக் குறிக்கும்.

திருமணங்கள்
சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன.
இன்னாருக்கு இன்னார் என்று
இறைவன் எழுதி வைத்திருக்கிறான்.

அப்படியென்றால் என் கருத்துக்கும்
ஒரு சொல் இருக்க வேண்டும்.

அந்தச் சொல்லைத் தேடிக்
கண்டுபிடிக்க வேண்டும்.

அந்தச் சொல்லைத் தேடிக் கண்டுபிடிப்பது
எளிதாகத் தோன்றவில்லை.

அது இருளில்
எங்கோ ஒளிந்திருப்பது போல் தோன்றியது.

நான் இருளில்
அதைத் தேடிப் புறப்பட்டேன்.

என் வார்த்தையைத் தேடி
இரவின் வாய்க்குள் புகுந்தேன்

இருளின் ஆழத்தில்
அந்த வார்த்தையைக் கண்டேன்.

அது ஒரு பூவைப் போல்
மலர்ந்திருந்தது.
ஒவ்வொரு சொல்லும் ஒரு மலர்ச்சிதான்;
பொருளின் மலர்ச்சி.

மலர்களால் தொடுக்கும் மாலை போலக்
கவிதையும்
சொற்களால் தொடுக்கும் மாலைதான்.

சொல் என்பது சப்தம்;
சப்தம் என்பது மௌனத்தின் காயம்.

எனவே என் சொல் பூவாகவும்,
காயமாகவும் தெரிந்தது.

அந்தகார ஆழத்தில்
அது
காயமாகப் பூத்திருந்தது.

என் வார்த்தையைத் தேடிக்
கண்டுபிடித்த அனுபவம்

மற்றொரு மனக் காட்சியை உருவாக்கியது.
நட்சத்திரங்கள் எனக்கு
எழுத்துக்களாகத் தோன்றுவதுண்டு.

இது என் சொந்தப் படிமம்.

மனக் கண்ணில் நட்சத்திரங்கள் தோன்றியதும்
நிலாவும் தோன்றியது.
திடீரென்று நிலா
முரசு போல் தோன்றியது.
நட்சத்திரங்கள்
அதைச் சுற்றிக் குரவையாடுவது போல்
தோன்றியது.

நர மாமிசம் உண்போர் (Cannibals)
யாராவது மனிதன் அகப்பட்டால்
அந்த சந்தோஷத்தைக் கொண்டாட
முரசு கொட்டிக் குரவையாடுவார்கள்.

எழுத்துக்கள் என்ற நட்சத்திரங்களும்
சந்தோஷம் கொண்டாடுகின்றன.

நரமாமிசம் உண்போர் பாடும் பாட்டில்
தேன் இருக்காது; ரத்தம்தான் இருக்கும்.
அந்தப் பாட்டு
கேட்க இனிமையாக இருக்காது;
அருவருப்பாக இருக்கும்.

நட்சத்திர வேஷமணிந்த
எழுத்துக்கள்
நிலா முரசைச் சுற்றிப்

பாட்டு ரத்தத்தை
வாந்தி எடுத்தபடி
குரவையாடிக் கொண்டிருந்தன

சொல் என்பது
எழுத்துக்களின் கூட்டம்.

எழுத்துக்களின் கூட்டம்
சாப்பிட எது கிடைத்த மகிழ்ச்சியில்
ஆடுகின்றது?

அர்த்தம் கிடைத்த மகிழ்ச்சியில்தான்.

கவிதையில் எது முக்கியம்?
சொல்லா, பொருளா?

'சொல்லின் மதிப்பு
அதன் அர்த்த வெளிப்பாட்டில் இருப்பதை விட
அதன் ஒலியில் கூடுதலாக இருக்கிறது.
உண்மையில் சொல்லில் உள்ள ஒலி அதிர்வுகள்
அண்ட மூச்சினுடைய ஏற்ற இறக்கமாகும்.
(The modulation of the cosmic breath).
ஒரு சொல்லைச் சரியாக உச்சரித்தால்,
அதை அண்டத்தின் பல்வேறு சந்தங்களுக்கேற்பச்
சுதி ஏற்றினால்
அது தன் மூல சக்தியைப் பெறும்' என்பது
எகிப்திய தத்துவம் (The Book of the Dead).

சொல் என்பது மந்திர ஒலி.
எல்லாச் சொல்லும் மந்திரச் சொல்லே.

சொல்லின் சந்த பீடத்தில்
அர்த்தம் தன்னையே பலி கொடுத்துவிடுகிறது.

இது அர்த்தத்திற்குச்
சொல்லின் மீதுள்ள பயபக்தியாகும்.

> அர்த்தம்
> சந்த பீடத்தில்
> தன் சுவாசத்தை
> அர்ப்பணம் செய்தது

ஒரு கவிதை உணர்வுக்காக
ஒரு சொல்லைத் தேடிய அனுபவத்தையே
ஒரு கவிதையாக எழுதினேன்.

அது 'பலிபீடம்' என்ற தலைப்பில்
என் 'பால்வீதி'யில் இருக்கிறது.

■

*15.12.2004*



பால்வீதியில் உள்ள
சர்ரியலிஸப் பரிசோதனைக்
கவிதைகள்
எப்படி உருவாயின
என்பதை விளக்கும்
நூல்

ஒவ்வொரு கட்டுரையும்
ஒரு வசன கவிதை

நேஷனல்
பப்ளிஷர்ஸ்

ISBN 978-81-936445-8-4

₹45.00